27th April 1960]

Clause 5 was put and carried.

Clause 6 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be passed."

MR. SPEAKER: The question is—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

## (5) THE MADRAS JUDICIAL PROCEEDINGS (REGULATION OF REPORTS) BILL, 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of 21 members (14 members of the Legislative Assembly and 7 members of the Legislative Council) to consider the Madras Judicial Proceedings (Regulation of Reports) Bill, 1960 (L.A. Bill No. 12 of 1960) and that the following members of the Legislative Assembly be selected to serve on such a Joint Select Committee:—

1. The Hon. Sri C. Subramaniam.
2. The Hon. Sri M. Bhaktavatsalam.
3. Sri T. T. Daniel.
4. Sri T. Sampath.
5. Sri V. S. Manikkasundaram.
6. Sri P. Ramachandran.
7. Srimathi T. N. Anandanayaki.
8. Sri A. P. C. Veerabahu.
9. Sri V. Vedayyan.
10. Sri M. P. Subramaniam.
11. Sri P. S. Chinnadurai.
12. Sri Sowdi S. Sundara Bharathi.
13. Sri D. S. Authimoolam.
14. Sri M. Kalyanasundaram."

இந்த மசோதாவும் பத்திரிகைகளைப் பொறுத்தது. நேற்றைய தினம் ஒரு மசோதாவை இங்கே பிரேரேபிக்கும்போது பல மோசமான விஷயங்கள் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுவதைப் பற்றிக் குறிப்பிட்டேன். இப்படிப் பட்ட ஆபாசமான விஷயங்களை வேறு எங்கிருந்தும் பொறுக்குவது சுலபம். இப்படிப்பட்ட கேசுகள் ஏராளமாக கோர்ட்டுகளில் வருகின்றன. ரேப் கேஸ்கள் வருகின்றன. வாலிப பெண்கள் ஈடுபடக் கூடிய கேஸ்கள் பல வருகின்றண. அவைகளை எடுத்து பிரசுரிக்கிறோம் என்ற முறையில் ரொம்பவும் ஆபாசமான முறையில் இவைகள் எல்லாம் பிரசுரிக்கப்படுகின்றண. பல பத்திரிகைகளுக்கு இங்கு சட்டசபைக்கு வருகிற நிருபர்களைப் போல் இருக்கிறார்கள். அவைகளைப் பற்றிய விஷயங்களை சேகரிப்பதற்கு என்று சில நிருபர்கள் இதே வேலையாக இருக்கிறார்கள். அவர்களுக்கு

வேலே இப்படிப்பட்ட விஷயங்களைச் சேகரிப்பதுதான். கோர்ட்டுகளிலிருந்து இப்படிப்பட்ட விஷயங்களைத் தெரிந்து கொண்டு அவைகளை பத்திரிகைகளுக்கு அனுப்புகிறார்கள். பத்திரிகைகள் அப்படிப்பட்ட விஷயங்களுக்கு முக்கியமான தலைப்புகள் கொடுத்து, பிரதானம் கொடுத்து அதன் மூலம் தங்களுடைய பத்திரிகைகளை அதிகப்படியாக விற்பதற்கு ஏற்பாடு செய்கிறார்கள். அதற்கு வேண்டிய முயற்சியும் எடுத்துக்கொள்ளப்படுகிறது. இப்படிப்பட்ட பல பத்திரிகைகள் இருக்கின்றன. இப்பொழுதுள்ள நிலையில் அதை தடுக்க முடியாது. ஏனென்றால் கோர்ட்டுகளில் நடக்கக்கூடிய விஷயங்களைத்தான் போடுகிறோம் என்று வெகு சுலபமாகச் சொல்லிவிடலாம். கோர்ட்டு நடவடிக்கையாக இருந்தாலும் அதை முன் அனுமதி பெற்றுத்தான் போடவேண்டும் என்ற முறையில் ஒரு விதத்தில் கட்டுப்பாடு செய்யக் கூடிய சட்டம் இது. பல முறை ஆலோசனை செய்து இது கொண்டு வரப்பட்டிருக்கிறது. இம்மாதிரியான ஒரு சட்டம் அவசியம் என்று கருதிக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. பம்பாயிலும், இப்படிப்பட்ட ஒரு சட்டம் இருக்கிறது. இங்கு ஏற்பட்டது போன்று அங்கும் இப்படிப்பட்ட ஒரு நெருக்கடி ஏற்பட்டிருந்திருக்கிறது என்று நினைக்கிறேன். அதனால் அங்கும் இதைப் போல் ஒரு சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றி அது அமுலில் இருக்கிறது. அந்த அடிப்படையில்தான் இந்தச் சட்டமும் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதற்கு முன் கொண்டு வந்த சட்டமும் செலெக்ட் கமிட்டிக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அதே அங்கத்தினர்கள் தான் இதிலும் இருக்கிறார்கள். ஆகவே இந்த மசோதாவையும் ஒன்றாக பரிசீலனை செய்து முடிவு செய்வதற்கு இடம் இருக்கிறது. ஆகவே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

Sri K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன். ஆனால் ஒரு சில விஷயங்கள், ஒரு வேளை விட்டுப் போய் விடுமோ என்ற எண்ணத்துடன் பொறுக்குக் கமிட்டி அவைகளைப் பற்றி கொஞ்சம் பரிசீலனை செய்து முடிவு செய்ய வேண்டும் என்பதற்காக கூற விரும்புகிறேன். இதில் டெபனிஷனில் மாட்ரிமோனியல் என்று குறிப்பிட்டிருப்பதில் ஜீவனாம்ச வழக்கும் உட்படுமா என்பதைப் பற்றி சில ஐயப்பாடுகள் இருக்கின்றன. அது மட்டுமல்ல, சில மெயின்டனன்சு பெடிஷன்கள் கோர்ட்டில் வரும். அதையும் எந்த விதத்திலும் ஆபாசமாக பிரசுரிக்கலாம். அப்படியே இப்பொழுதும் சிலர் பிரசுரிக்கிறார்கள். அவைகளும் இதில் உட்படும் என்று மாத்திரம் இந்த மசோதாவில் வாக்குறுதி இருக்குமானால் அதுவே போதுமானதாக இருக்கும். வேண்டுமானால் அல்லது அவசியமானால் பொறுக்குக் கமிட்டி அந்த அளவில் அதில் திருத்தம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறுகிறேன். அதைப் போலவே செக்ஷன் 5-ல் **'No court shall take cognizance of any offence under this Act except with the previous sanction of the Government.'**

என்று இருக்கிறது. இது சரியல்ல என்று நான் கருதுகிறேன். ஏனென்றால் ஒவ்வொரு விஷயமும் சர்க்காருக்கு வந்து சர்க்கார் விரும்பினால் மாத்திரம் வழக்கு தொடருவது என்றால் அது மிகவும் கஷ்டமான காரியமாக இருக்கும். அதாவது யார் பாதிக்கப்படுகிறார்களோ, யாருக்கு அக்கரை இருக்கிறதோ அவருக்கு அந்த உரிமை இருக்கவேண்டும். அப்படி வழக்குத் தொடரக்கூடிய உரிமை இருக்கவேண்டும். அப்படி இருந்தால் தான் இன்று இருப்பதை விட இந்தச் சட்டம் அமுலுக்கு வரும்போது அவர்களுக்கு பாதுகாப்பு இருக்கும். பத்திரிகைகாரர்களுக்கும் அப்படி பிரசுரிக்காமல் இருப்பதற்கு ஒரு அச்சமும் இருக்கும்.

அடுத்தபடியாக பத்திரிகையாளர்களுக்கு பெனல்டி கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி அவர்களுக்கு 6 மாதம் அல்லது ஆயிரம் ரூபாய் என்று இருப்பது சரியல்ல. அடல்ட்ரேஷன் ஆப் புட் ஆக்ட்டில் சாதாரணமாக அபராதமும் சிறையும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதைப் போலவே ஆறு மாதம் அல்லது அபராதம் என்று இருப்பதற்குப் பதிலாக ஆறு மாத சிறைத் தண்டனையும் அபராதமும் என்று இருக்கவேண்டும். அந்த முறையில்

27th April 1960] [Sri K. Sattanatha Karayalar]

திருத்தம் செய்துகொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. அபராதம் மட்டும் என்றால் சாதாரணமாக அதைச் சம்பாதித்து விடலாம். லட்சக்கணக்காக சம்பாதிக்கக்கூடியவர்களுக்கு இந்த அபராதத்தைக் கட்டுவது கஷ்டமல்ல. இப்படிப்பட்ட டேப்ளாயிட் ஜெர்னல்கள் எல்லாம் எவ்வளவோ சம்பாதிக்கலாம். சாதாரணமாக ஐந்து ஆயிரம் சம்பாதித்து விட்டு 500 ரூபாய் அபராதம் கட்டி விடலாம். அது அவர்களுக்கு பெரிய காரியம் அல்ல. ஆபாசமாக பிரசுரிப்பதை தடை செய்வதற்கு பலர் அதிகப்படியான பணத்தைக் கொடுக்க தயாராக இருப்பார்கள். அதனால் அவர்களுக்கு பணத்தைப் பற்றி லட்சியம் அல்ல. ஆகவே அபராதத்தோடு சிறைத் தண்டனையும் இருக்கவேண்டும் என்று திருத்தம் செய்யவேண்டும். இதை வைத்துக்கொண்டு சில பத்திரிகைகள் வியாபாரம் செய்கிறார்கள். அவர்களுக்கு அபராதம் மட்டும் போதாது. சிறை தண்டனையும் இருக்க வேண்டும் என்ற அளவில் திருத்தம் செய்ய வேண்டும்.

கடைசியாக சில விஷயங்கள் கோர்ட்டுக்குப் போவதற்கு முன்னதாகவே பிரசுரிக்கப்படுகிறது. அவைகளையெல்லாம் தடை செய்ய வேண்டும். தடை செய்யலாம் என்று தோன்றுகிறது. இருப்பினும் போலீஸ் இன்வெஸ்டிகேஷனில் இருக்கும்போதே சில விஷயங்கள் பிரசுரிக்கப்படுகின்றன. சில விஷயங்கள் கடிதம் எழுதுவது போன்று எழுதுகிறார்கள். அதையெல்லாம் இந்தச் சபையில் வாசித்தால் அது இந்த சபையின் கௌரவத்தையே பாதிக்கும் என்ற அளவில் இருப்பதால் அதை வாசிக்க விரும்பவில்லை. இப்படிக் கடிதம் போல் எழுதி பிரசுரிக்கிறார்கள். அதற்கு பதிலும் கடிதம் போல் எழுதுகிறார்கள்.

அது தினம் தினம் லட்சக் கணக்காக அச்சிடப்பட்டு இந்த மாகாணம் 4 p.m. முழுதும் ஒரு பெரும் வியாபாரமாக நடக்கின்றது. அப்படி இருக்கக்கூடிய கடிதங்களையும் தடை செய்ய வேண்டும். ஒருவருக்கு ஒரு சந்தேகம் வருகிறது. "இளம் மங்கை மணிப்பர்சை எங்கே வைக்கிறாள்?" அந்தக் கேள்விக்கு பத்திரிகையில் பதில் வருகிறது. அந்தப் பதிலை நான் இந்த சபையிலே வாசிக்கக் கூசினாலும், நாட்டிலே உள்ள லட்சக் கணக்கான இளைஞர்கள் படிக்கிறார்கள். இளம் உள்ளங்களில் பால் உணர்ச்சியைப் புகுத்தி, பணம் திரட்ட வேண்டும் என்று டேப்ளாயிட் ஜர்னலிசம் (**tabloid journalism**) முறையை கையாள்கிறார்கள். எனவே இதைக் கண்டிப்பாக தடுத்தாக வேண்டும். அதற்கான முறையிலே இதைப் பொறுக்குக் கமிட்டியிலே சாங்கோபாங்கமாக பரிசிலனை செய்து, இதைத் தடுக்கக் கூடிய முறையிலே திருத்தங்களை கொண்டுவரவேண்டும். அப்படி பிரசுரம் செய்பவர்களுக்கு அவசியம் சிறைத் தண்டனை கொடுக்க வேண்டும் என்று கூறி இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

Sri T. T. DANIEL: Mr. Speaker, Sir, I support the Bill. It is really a very useful piece of legislation and it has been brought in time when some of our newspapers in publishing the judicial proceedings in connection with sex offences, they have been publishing them in an indecent and obscene manner, which definitely affects the morale of our young men. But I would say that under this Bill, the offence is not made cognizable. It is not stated anywhere in the Bill whether it is cognizable or non-cognizable. If it is cognizable it may be possible for the police to take action. If it is not, the police cannot take action. Therefore I suggest that clause 5 of the Bill requires some re-casting. It may be re-cast as follows:—

"No court shall take cognizance of any offence under this Act, except with the previous sanction of the Government and upon the filing of a written complaint either by the aggrieved party or by a police officer not below the rank of a Sub-Inspector."

That, I think, is quite necessary. Otherwise it would appear that no court of law can decide as to who would obtain the sanction of the Government, whether the party aggrieved alone should obtain the

sanction or whether the police officer within whose jurisdiction the offence has been committed has got to get the sanction. All these will create lot of difficulties in the prosecution of such cases. I would suggest that it must be made quite clear in the Act itself that the aggrieved party also should have the right to file the complaint and get the sanction of the Government. We should also state that a particular officer of a particular rank, and not any police officer can rush to the Government and get sanction. He should be a responsible police officer and an officer not below the rank of a Sub-Inspector alone should be empowered to get the sanction of the Government and institute proceedings, upon filing a written complaint.

SRI M. P. SUBRAMANIAM : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இப்பொழுது கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த மசோதாவினுடைய நோக்கத்தை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். இதில் இரண்டு விதமான கருத்துக்கு தமிழ் நாட்டில் நல்லவர்களுடைய உள்ளத்தில் இடமிருக்கும் என்று நான் நினைக்கவில்லை. நேற்றைய முன்தினம் நாம் இங்கே கொண்டுவந்த அந்த மசோதாவும், இதுவும் சேர்ந்து, ஆபாசமான, கீழ்த்தரமான உணர்ச்சிகளை வாலிபர்கள் அல்லது இளைஞர்கள் உள்ளத்திலே ஏற்படுத்தக்கூடியவைகளை தடுப்பதற்கு பயன்படும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இதைப் போன்ற பல செய்தித் தாள்கள் நடமாடிக் கொண்டிருக்கின்றன. நல்ல கருத்துடைய செய்தித் தாள்கள் எல்லாம் இன்றைக்கு எண்ணிக்கை குறைந்து, இதைப் போன்ற செய்தித் தாள்கள் இளைஞர்கள் மத்தியிலே ஏராளமாக நடமாடுவதை நாம் பார்க்கின்றோம். இவைகளை உறுதியாகக் கட்டுப்படுத்துவதற்கு இப்பொழுதாவது அரசாங்கம் நடவடிக்கை எடுத்ததைப்பற்றி நான் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைகிறேன். எனக்கு முன்னால் பேசிய நண்பர் சட்டநாத கரையாளர் அவர்கள் சொல்லிய இரண்டு விஷயங்களும் இந்த சட்டத்திலே உட்படும், என நினைக்கிறேன். நேற்றைக்கு முன் தினம் கொண்டு வந்த மசோதாவிலேயே வழக்கு மன்றத்துக்கு வராத சம்பவங்கள் செய்தித் தாள்களில் பிரசுரமானால் 'எல்லோ ஜர்னலிசம்' என்ற தத்துவத்தின் கீழ் கொண்டுவர முடியும் என்று நினைக்கிறேன். அதைப் போலவே ஜீவனாம்சம் என்று போட்டாலும் இதிலே அடங்குமா என்று தெரியவில்லை. அடங்கிவிடும் என்று நான் நினைக்கிறேன். இந்த இரண்டு மசோதாக்களிலும் அவை அடங்காவிட்டால் அதற்கான திருத்தங்களை பொறுக்குக் குழுவில் செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இதை நாம் குற்றம் என்று கருதுவோமானால், மற்ற குற்றங்களைப் போலவே பாவித்து, அதனால் யார் பாதிக்கப்படுகிறார்களோ, அல்லது போலிஸ் அதிகாரிகளோ, நேரடியாக வழக்கு மன்றத்துக்கு எடுத்துச் செல்லவேண்டும். "No court below that of a Presidency Magistrate or of a Magistrate of the First Class shall try any offence under this Act" என்று உயர்ந்த நீதி மன்றங்களுக்கு முன்புதான் வழக்குகளை எடுத்துச் செல்ல வேண்டும் என்று இருப்பதனால், அரசாங்கத்தின் அனுமதி பெற்றுத்தான் வழக்குகளை நடத்த வேண்டுமென்றால் பல மாதங்கள், பல வருஷங்கள் கூட ஆகின்றன. எனவே இது போன்ற சாதாரண குற்றங்களை உடனுக்குடன் வழக்கு மன்றங்களில் எடுத்துச் சென்று தண்டனை செய்வதற்கு அரசாங்க அனுமதி என்ற பெயரிலே ஒரு விதி ஏற்படுத்தி இருப்பது அவசியமில்லை என்று நினைக்கிறேன். வழக்கு மன்றங்களுக்கு, தவறு செய்தவர்கள் எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும், வழக்குத் தொடர இந்த விதி தடையாக இருக்கக் கூடாது. ஆகவே 5-வது பிரிவிலே 2-வது உப பிரிவை உறுதியாக நீக்கிவிட வேண்டும் என்று இந்த நேரத்திலே கேட்டுக் கொள்கிறேன்.

இதிலே கொடுக்கப்பட்டிருக்கிற தண்டனை குறைவு. அதை அதிகமாக்கினாலும் யாரும் மனக்கஷ்டம் படுவதற்கு இடமில்லை. எனக்கு ஒன்று தோன்றுகிறது. பாகிஸ்தானில் இப்பொழுது கள்ள மார்க்கெட் செய்பவர்

27th April 1960] [Sri M. P. Subramaniam]

களுக்கு நீதி மன்றங்களிலே சவுக்கடி கொடுக்கப்பட்டு, ஊர் மக்கள் அறிய வாய்ப்பு இருக்கிறது. அதைப்போல் இந்த குற்றத்திற்கும் சவுக்கடி கொடுத் தால்கூட நமது பண்பாடு காப்பாற்றப்பட வேண்டும் என்று கருதுபவர்கள், மனக்கசப்பு அடைய மாட்டார்கள். தமிழர் பண்பாட்டை நல்லபடி நிலை நாட்டுவதற்கு இதைப்போன்ற கடுமையான விதிகள் அச்சட்டத்தில் இருந் தால்தான் இன்றைக்கு இருக்கக்கூடிய இப்போக்கை மாற்ற முடியும் என்று நான் உறுதியாக நம்பி, இந்த மசோதாவை மனப்பூர்வமாக வர வேற்கிறேன்.

SRI V. SANKARAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் சொன்னார்கள், ஜீவனாம்சம் சம்பந்த மான வழக்குகளை பிரசுரம் செய்தால் இந்த சட்டத்தில் வருமா என்று, "Matrimonial matters என்ற definition-லே any proceeding for dissolution or nullity of marriage, or for judicial separation, or for restitution of conjugal rights, or any proceeding under Chapter XXXVI of the Code of Criminal Procedure, 1898" என்று இருப்பதால், ஜீவனாம்சம் சம்பந்தமான வழக்குகளைப்பற்றிய Chapter அது. எனவே ஜீவனாம்சம்பற்றிய வழக்குகளும் இந்த மசோதா வில் அடங்கிவிடுகிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

நேற்று முன் தினம் வந்த மசோதாவில், பத்திரிகையிலே ஒரு தனிப் பட்ட நபரை புண்படுத்தும் வகையிலே, கேவலப்படுத்தும் வகையிலே ஏதாவது பிரசுரிக்கப்படும்பொழுது, அந்த நபர் வழக்குத் தொடர சங்கோஜ பட்டால், சர்க்காரே வழக்குத் தொடருவதற்கு அநுகூலமாக இருக்கும் என்று சொல்லப்பட்டது. அப்பொழுது தனிப்பட்ட நபரைக் குறிப்பிடாது பிரசுரிக்கும்போது, வழக்குத் தொடர இந்த மசோதாவில் இடம் இருக் கிறதா என்று சந்தேகப்பட்டேன். அதே போன்று வழக்கு பதிவு செய்யப் பட்டு, கைது செய்யப்படும்பொழுது, அது பத்திரிகைகளில் பிரசுரிக்கப் பட்டால், இந்த மசோதாவின்கீழ் கொண்டுவர இடம் இருக்க வேண்டாமா ? அதற்கும் இந்த மசோதாவில் கட்டாயம் இடமிருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஒவ்வொன்றுக்கும் 'Sanction of the Government, aggrieved party வாங்க வேண்டுமென்றால், பத்திரிகைமேல் யாரும் கேஸ் போட முன் வரமாட்டார்கள். தங்களுடைய சுய கவுரவத்தைவிட்டு, அரசாங்கம் வரையி லும் போய், எந்த பத்திரிகையின்மீதும் வழக்குப் போட முன்வர மாட்டார்கள். அப்படி துணிந்து வருபவர்கள் தவறாகவோ, பொய்யாகவோ போட இடம் இருக்கிறது. மேலும் ஒவ்வொரு வழக்குக்கும் Government sanction வாங்க வேண்டுமென்றால், காலதாமதமும், கஷ்டமும் ஏற்படும். ஆகவே aggrieved party, Government sanction வாங்க வேண்டும் என்ற provision இருக்க வேண்டிய அவசியமில்லை.

நான்காவது செக்ஷனில், punishment-ல் கூட and with fine என்று இருக்கலாம். சிறை தண்டனையும், அபராதமும் சேர்ந்து இருக்க லாம். தண்டனையை மேலும் கடுமைப்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

செக்ஷன் 3, சப்-கிளாஸ் (c)-ஐ எடுத்துக்கொண்டால், 354, 366-எ, 366-பி, 376, 377, 498, I.P.C., குற்றங்கள் செய்யப்படும்போது attempt to murder போன்ற, குற்றங்கள் ஏற்படலாம். அந்த கேஸ்கள் இந்த செக்ஷனுக்குள் வருமா என்று அறிய விரும்புகிறேன். Abduction, Adultery, Rape, Kidnapping போன்ற கேஸ்கள்தான் சப்-கிளாஸ் 3-ல் வருகிறது. ஆகவே இந்த செக்ஷன் இன்னும் கொஞ்சம் broad based ஆக இருந்தால் நல்லது. பொறுக்குக் கமிட்டியில் இதை யெல்லாம் சிந்தித்து எப்படி இந்த மசோதா இருந்தால் பத்திரிகைகள் தப்பிக்காமல் இருக்க முடியுமோ, அப்படிச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். இந்த மசோதாவை கொண்டுவந்ததற்காக அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். ஆனாலும் எனக்கு ஒரு விஷயத்தில் வருத்தம்தான். இந்த மசோதாவானது சில காலத்துக்கு முன்பே கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும். இப்போதுகூட கொஞ்சம் யோசனையின்பேரில்தான் இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப விரும்புகிறார்கள். பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பாமல் இப்போதே சட்டமாக நிறைவேற்றிவிட்டால் என்ன என்பது தான் என்னுடைய கேள்வியாகும். இந்த மசோதாவில் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பக்கூடிய அளவுக்கு சிக்கலான விஷயம் ஒன்றுமில்லை. பத்திரிகைகள் ஒன்றோடு ஒன்று போட்டி போட்டுக்கொண்டு ஆபாச விஷயங்களை பிரசுரிக்கின்றன. அதன் காரணமாக, முக்கியமாக மாணவர்கள் மாணவிகள் கெடுகின்றார்கள். சமூகமே பாதிக்கப்படுமோ என்கிற பயம் கூட தோன்றுகிறது. ஆகவே இப்படி ஆபாச விஷயங்களை பிரசுரிப்பதை எவ்வளவு சீக்கிரம் தடுக்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் தடுக்கப் பட்டால் பொதுமக்களுக்கு, சமூகத்திற்கு நன்மை செய்ததாகும் என்பது என்னுடைய அபிப்பிராயம். மசோதாவின் நான்காவது பிரிவில் ஆறு மாத தண்டனை, **'or with fine'** என்று சொல்லப்பட்டிருக்கிறது. அபராத தொகையையும் சிறை தண்டனையையும் இன்னும் அதிகப்படுத்த முடியுமா என்று யோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு விடாமல் நிறைவேற்றுவது சாத்தியப் படாதா என்பதை சிந்திக்க வேண்டுமென்று மீண்டும் கேட்டுக்கொண்டு, இந்த மசோதா காலதாமதமாக கொண்டுவரப்பட்டுள்ள போதிலும், அதை முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

**Sri M. S. SELVARAJAN** : சபாநாயகர் அவர்களே, சபைமுன் உள்ள இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன். நகைச்சுவை, கேலிச் சித்திரம் இவைகள் எல்லாம் இன்பமூட்டக்கூடிய கலைகள். அவைகளுக்கு பங்கமில்லாமல், நாம் நிறைவேற்ற இருக்கிற இந்த மசோதாவில் தகுந்த பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்பது என்னுடைய யோசனை. எனக்கு முன்பு பேசிய நண்பர்கள் எல்லாம் குறிப்பிட்ட பிரகாரம் **5-வதுபிரிவில், contempt of court** இருக்குமேயானால், யார் வேண்டுமானாலும் **case** போடலாம், சம்பந்தப்பட்டவர்கள் என்று இல்லாமல் யார் வேண்டுமானாலும் கோர்ட்டுக்கு இழுத்துச் செல்லலாம் என்று இருப்பது போல அரசாங்க அனுமதி வருகிற வரையில் காத்திருக்க வேண்டிய அவசியம் இல்லாமல், யாரும் இத்தகைய ஆபாச பிரசுரங்களைப்பற்றி, வழக்குத் தொடரக்கூடிய அளவுக்கு வகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இரண்டாவது பிரிவில் **judicial proceeding** என்பதற்கு கொடுத்திருக்கிற **definition.**ஐ எடுத்துக்கொண்டால் வழக்கு ஆரம்பத்தில் புகார் செய்யப்படுகிறது; போலீசார் பதிவு செய்கிறார்கள். புகார் செய்யப் படுகிற எல்லா வழக்குகளும் பதிவு செய்யப்படுவதில்லை. புகார், பதிவு இரண்டும்கூட கோர்ட்டுக்கு வருவதற்கு முன்பு நடக்கக்கூடிய **processes** இந்த இரண்டு செயல்களையும்கூட பத்திரிகைகளில் இழுத்து அவசியமில்லாமல், தவறு செய்யாதவர்களையும், தவறான முறையில் காட்டக் கூடிய துர்பாக்கிய நிலைமைகள் எல்லாம் ஏற்படுகின்றன. ஆகவே இதைப் பொருத்து இரண்டாவது பிரிவில் கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய விளக்கம் போதுமானதாக இல்லை. அதற்கு தகுந்த விளக்கம் பாதுகாப்போடு தேவை என்று நினைக்கிறேன்.

மூன்றாவது பிரிவில் நண்பர் சங்கரன் ஜீவனாம்ச வழக்குகளைப் பொறுத்த மட்டில் அதற்குரிய விளக்கம் இருப்பதாக தெரிவித்தாலும்கூட, நான் அறிந்தமட்டில் அதற்கு சரியான விளக்கமிருப்பதாக தெரியவில்லை. ஜீவனாம்ச வழக்குகள் **within cell** அதாவது குறிப்பிட்ட இடத்தில் கோர்ட்டில், சட்ட பூர்வமாக இருக்கக்கூடிய உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ள வழக்காடினாலும்கூட, குடும்பச் சண்டை மாறி, மீண்டும் ஒருவருக்கு ஒருவர் உறவு கொள்ளக்கூடிய நிலைமையை உண்டுபண்ணலாம்.

ஜீவனும்ச வழக்கு செய்திகள் பத்திரிகையில் வருவதால், மீண்டும் மனம் மாறி ஒருவருக்கொருவர் உறவுகொள்ள அது தடையாக அமையக்கூடும். ஆகவே இதை நீக்க, ஜீவனும்சம் பொறுத்தமட்டில், இந்த மசோதாவில் சரியான **definition** வேண்டுமென்று கருதுகிறேன்.

' கேள்வி—பதில் ' என்ற தலைப்பிலும், இன்னும் வேறு தலைப்பு களின் கீழும், பத்திரிகைகள் ஒன்றைப் பார்த்து மற்றொன்று அசம்பா விதமான போட்டிகளில் இறங்கி, தவருன, ஆபாசமான விஷயங்களை வெளிப்படுத்துகிற நிலைமை இருக்கிறது. இவற்றை தடுக்கின்ற முறையில் மசோதாவில் போதிய பாதுகாப்பு செய்து மசோதா சட்டமாக நிறை வேற்றப்பட்டால் இந்த நாடு முழுவதும் பயனடையும் என்று கூறி முடிக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர் களே, இந்த மசோதாவில் **Matrimonial matter** என்பதன் கீழ் ஜீவனும்ச வழக்குகள் வருமா என்று அங்கத்தினர்கள் அறிய விரும்புகிருர்கள். **Section 498**-ன் கீழ் ஜீவனும்ச வழக்குகள் கிரிமினல் கோர்ட்டுகளில் போடப்படும்போது, வருகிறது. சிவில் ஜீவனும்ச வழக்குகள் அவ்வளவு சுவாரசியமாக இருக்காது. அதோடுகூட, அதிகமான வழக்கு களும் கிடைக்காது. கிரிமினல் கோர்ட்டுகளில் நடக்கிற ஜீவனும்ச வழக்கு களைத்தான் தேடிப் பிடித்து பத்திரிகையில் ஆபாசமாக போட்டுக்கொண் டிருக்கிருர்கள். ஆகவே, இந்த மசோதாவானது சிவில் கோர்ட்டுகளில் விசாரணைக்குவரும் ஜீவனும்ச வழக்குகளை உள்படுத்துவதாக இருப்பது அவசியமில்லை என்று நினைக்கிறேன். இந்த விஷயத்தை பொறுக்கு கமிட்டியில் பரிசீலிக்கலாம். இது மட்டுமல்ல. இன்னும் பலவகையான வழக்குகளை இந்த மசோதாவில் உள்படுத்திவிடலாம் என்று தெரிவிக்கப் பட்டது. இந்த யோசனையையும் பொறுக்கு கமிட்டியில் கவனிக்கலாம்.

வாரத்துக்கு ஒரு தடவை, இத்தகைய ஆபாச செய்திகள் பத்திரிகையில் வந்தால், அந்த பத்திரிகையை யாரும் வாங்கமாட்டார்கள். பத்திரி கையை எடுத்துக்கொண்டால், ஒவ்வொரு நாளும் 7, 8 இடங்களில் ஆபாச செய்திகள் இருக்கிறது என்று தெரிந்தால்தான், அந்த பத்திரிகைக்கு ஒரு தனி கிராக்கி ஏற்படுகிறது. இப்போது நாம் எடுத்துக்கொண்டிருக்கிற விஷயங்களை எடுத்துவிட்டால் கேலி விஷயமோ, மற்ற கொலை சம்பந்த மான விஷயங்களை தினமும் போட முடியாது போய்விடும். மற்ற குற்றங் களைக் கொண்டுவந்து சேர்க்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. தினமும் இந்தச் செய்திகளையே எழெட்டு கொடுத்து லாபம் சம்பாதிக்கலாம் என்கிற நிலை ஒழிக்கப்பட்டுவிடும். எப்போதோ ஒன்று வருகிற செய்தியினுல் பெரிய தீங்கு கிடையாது. தினமும் ஏழு எட்டு என்று இந்தச் செய்தி களையே போடுவதனுல் தினம் வருகிறது என்ற காரணத்தினுல் படிக்கத் தூண்டுகிறது, சமுதாயத்தின் ஒழுக்கம் பாதிக்கப்படுகிறது. ஆகவே இந்த சட்டத்தின்கீழ் எல்லாவற்றையும் கொண்டுவர வேண்டும் என்பதற்கு அவசியம் இல்லை. அவசியமாக வேறு ஏதாவது சேர்க்க வேண்டும் என்ருலும் பொறுக்குக் கமிட்டியில் இதைப்பற்றி ஆலோசித்து முடிவு செய்யலாம். இன்னென்று. ஆயிரம் ரூபாய் அபராதம் போடுவதுபற்றிச் சொன்னுர்கள். அது உண்மை. ஆயிரம் ரூபாய் அபராதம் என்றுல் அதைக்கூடக் கட்டிவிட்டு " பார்த்தீர்களா, வாசகர்களுக்கா நாங்கள் ஆயிரம் ரூபாய் அபராதம் செலுத்தினேம் " என்று இதையே விளம்பரமாகவும் உபயோகப்படுத்திக்கொண்டுவிடக்கூடும். ஆகவே கட்டாயம் சிறை தண்டனை இருப்பதும், இன்னும் தண்டனையைக் கடுமையாக்குவதும்கூட பொறுக்குக் கமிட்டியில் வேண்டுமானுல் பரிசீலனை செய்யலாம்.

திரு. எம். பி. சுப்பிரமண்யம் அவர்கள் சொன்னுர்கள், சவுக்கடி கொடுப்பது நல்லது என்று. இந்த மாதிரி பத்திரிகை நடத்துகிறவர் களுக்கு நாற்சந்தி, முச்சந்தி என்று வைத்து சவுக்கடி கொடுப்பதனுல் கூடப் பாதகமில்லை. ஆனுல் நாம் அவ்வளவு தூரம் போக வேண்டிய தில்லை என்று நினைக்கிறேன். இந்த இரண்டு சட்டத்தின் மூலமாகவே இதை ஒழித்துவிடலாம் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது. அதற்கும்

[Sri C. Subramaniam] [27th April 1960

முடியவில்லை என்றால் அப்போது இருக்கிற சட்டமன்ற அங்கத்தினர்கள் அதைப் பரிசீலனை செய்வார்கள், எப்படி சட்டத்தைத் திருத்தவேண்டுமோ அப்படித் திருத்துவார்கள் என்று நினைக்கிறேன். இன்று நாம் எந்த அளவுக்குப் போகவேண்டும் என்பதை ஆலோசித்து அந்த அளவுக்குப் போக வேண்டும். அதிகமான தீமை ஏற்படுகிறது என்ற காரணத்தினால் அதிக தூரம் போகவேண்டிய அவசியம் இல்லை. நகைச்சுவையைப்பற்றி திரு. செல்வராஜன் குறிப்பிட்டார்கள். நகைச்சுவை என்றால் ஆபாசம் நகைச்சுவை ஆகாது. அது ஆபாசச் சுவை. சாதாரண நகைச்சுவைக்கு ஆபாசம் வேண்டியதில்லை. இதனால் உண்மையான நகைச்சுவை பாதிக்கப் படாது என்கிற உறுதியை நான் திரு. செல்வராஜ் அவர்களுக்குச் சொல்லிக் கொண்டு, நகைச்சுவை என்ற பெயரால் இந்த ஆபாசங்களை எல்லாம் தடுக்கவேண்டும் என்பதற்காக இந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER: The question is—

"That the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of 21 members (14 members of the Legislative Assembly and 7 members of the Legislative Council) to consider the Madras Judicial Proceedings (Regulation of Reports) Bill, 1960 (L.A. Bill No. 12 of 1960), and that the following members of the Legislative Assembly be selected to serve on such a Joint Select Committee:—

1. The Hon. Sri C. Subramaniam.
2. The Hon. Sri M. Bhaktavatsalam.
3. Sri T. T. Daniel.
4. Sri T. Sampath.
5. Sri V. S. Manikkasundaram.
6. Sri P. Ramachandran.
7. Srimathi T. N. Anandanayaki.
8. Sri A. P. C. Veerabahu.
9. Sri V. Vedayyan.
10. Sri M. P. Subramaniam.
11. Sri P. S. Chinnadurai.

Sri Sowdi S. Sundara Bharathi.

13. Sri D. S. Authimoolam.
14. Sri M. Kalyanasundaram."

The motion was put and carried.

## (6) THE MADRAS CITY TENANTS' PROTECTION (AMENDMENT) BILL, 1959 (L.A. BILL NO. 26 OF 1959).

THE HON. SRI M. A. MANICKAVELU: Mr. Speaker, Sir, I beg to move—

"That the Madras City Tenants' Protection (Amendment) Bill, 1959 (L.A. Bill No. 26 of 1959), as amended by the Select Committee be taken into consideration."

As the House is aware, this Bill which was introduced in this House on December 10th, 1959, was subsequently referred to a Select Committee of the House for detailed scrutiny. Before proceeding to explain the various changes made in the Bill by the Select Committee, I wish to give a short history of the Bill and its origin for the benefit of hon. Members.